# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 9 | ஜனவரி 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 9 | January 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



## மாணவர் நலம்



நமது செயல்களை வெற்றிகரமாக நிறைவேற்றிட நமது அறிவுதான் முக்கியத்துவம் மிகுந்தவையாகும். அதுபோல் நமது வாழ்வு சிறப்பாக அமைந்திட நமது கள்ளங்கபடமற்ற இயற்கையான நிலைதான் முக்கியத்துவம் மிகுந்ததாகும்.

புறத்தில் நமது செயல்களின் வெற்றிக்குத் தேவை அறிவு. அகத்தில் வாழ்க்கையின் அமைதிக்கும், மகிழ்ச்சிக்கும் தேவை இந்தக் கள்ளங்கபடமற்ற தன்மை. இதுதான் ஒவ்வொரு மாணவனிடமும் இருக்கவேண்டிய அடிப்படை மாண்பாகும்.

- ஸ்ரீ பகவத்

## ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டட வேலைகள் நடைபெற்று வருகின்றன. இந்தக் கட்டடப் பணி ஜனவரி மாதத்துக்குள் நிறைவடைந்துவிடும்.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

இதுவரை 3 உறுப்பினர்கள் சேர்ந்துள்ளனர். இன்னும் 5 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்படவுள்ளனர்.

இந்த அறையில் தந்தை,தாய், குழந்தைகள் என நான்கு பேர் வசதியாக தங்கலாம். தேவைப்பட்டால் இரண்டு அறைகளைக் கூட ஒன்றாக இணைத்துக் கொள்ளலாம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினரில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

இன்னும் 5 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்...**

**அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்...**

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. 99942 05880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# மாணவர் நலம்

- ஸ்ரீ பகவத்

(ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மாணவர்களின் நலனுக்காக நூல் ஒன்றை எழுதிக் கொண்டிருக்கிறார்கள். அந்நூலை நமது மாத இதழில் தொடர்ந்து ஒவ்வொரு அத்தியாயமாக வெளியிடலாம் என எண்ணி உள்ளோம். இதன் தொடக்கமாக இம்மாத இதழில் முன்னுரை மற்றும் முதல் அத்தியாய கதை வெளியிட்டுள்ளோம்.)

## முன்னுரை

"மாணவன்" என்ற தலைப்பில் இந்த நூல் எழுதப்பட்டாலும்கூட மாணவர் என்பது இளைஞர்களைக் குறிப்பிடுகின்றது.

- குழந்தைகளையும் குறிப்பிடுகின்றது.

இது மாணவர்களுக்காகவும், இளைஞர்களுக்காகவும் எழுதப்பட்டதாகத் தோன்றினாலும்,

உண்மையில் அவர்களை நோக்கி எழுதப்பட்டதன்று.

இந்த நூலைப் படித்து ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய பெரும் பொறுப்பு, பெற்றோர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன.

மாணவனாக இருந்தும், பெற்றோராக இருந்தும், ஆசிரியராக இருந்துங்கூட அனுபவப்பட்ட காரணத்தினால் மட்டும் இந்த நூலை எழுதிட முன் வரவில்லை.

மாணவர்கள் எதிர்கொள்ளும் சவால்களை நமது அணுகுமுறையின் படி சிந்திக்க நேர்ந்ததாலேயே இந்நூலை எழுத நேர்ந்தது.

பள்ளிப்பருவத்தில் என்னுடன் படிக்கும் போது யாரோ ஒருவர் விபத்தில் பலியானதைப் பார்த்திருக்கிறேன்.

மற்றபடி பள்ளி இறுதி வகுப்பான எனது காலத்து பதினொன்றாம் வகுப்பு வரை மாணவ–மாணவியர் எவரும் தற்கொலை செய்து கொண்டதாகப் பார்த்ததும் இல்லை, கேள்விப்பட்டதும் இல்லை.

ஆனால் இப்போதைய நிலைமையோ, சற்று விபரீதமாகவே காணப்படுகிறது.

7வது 8வது படிக்கும் சிறுவர், சிறுமியர் கூட தற்கொலை செய்து கொள்கின்றனர்.

நாம் பரிசீலிக்க வேண்டிய பிரச்சினைகளின் தீவிரத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக மட்டுமே.

தற்கொலை பற்றிய செய்திகளைக் கூறும்படி நேர்ந்துவிட்டது.

மற்றபடி, நாம் தெரிந்துகொள்ளவேண்டிய பிரதானமான அம்சம் இதுவன்று.

தற்கொலை போன்ற நிகழ்வுகளெல்லாம் விதி விலக்குகளே.

பிரதானமான சாலையில் பயணிப்பது மட்டுமே நாம் செய்ய வேண்டியதாகும்.

இட வசதியும், வாய்ப்புகளும் உள்ள பிரதான சாலைகளில் பயணிப்பது எளிது – பாதுகாப்பானது.

சந்து பொந்துகளில் பயணிப்பதுதான் சிக்கலானது. – ஆபத்தானது.

நமது ஆய்வின் பிரதான அம்சத்தை முதலில் பார்ப்போம்.

பிறகு தேவைப்பட்டால் பிரதான சாலையோடு தொடர்பு கொள்ளும் சிறிய சாலைகளையும் பார்ப்போம்.

## 1. மாணவனின் மாண்பு

ஒரு மாணவனைப் பார்த்து," தம்பி, நீ எதற்காகப் படிக்கிறாய்?" என்று கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

"நான் டாக்டருக்குப் படிக்கப் போகிறேன்! நான் கலெக்டராகப் போகிறேன்! நான் போலீஸ் அதிகாரியாகப் போகிறேன்!"

–இப்படி ஏதாவது ஒன்றைத்தான் அவன் கூறுவான்.

அவனுடைய தாய் தந்தையைக் கேட்டால் கூட அவர்களும் இதைத்தான் கூறுவார்கள்.

நாம் என்ன கூறப் போகிறோம்?

நாமும் இதைத்தான் கூறப் போகிறோமா?

நான் மாணவனாகப் படித்த காலத்தில் எனது கிராமத்தில் என்னுடன் படித்த மாணவன் ஒருவன். அவன் சுமாராகத்தான் படிப்பான்.

அவனது தந்தையார் கிராமத்துப் பண்ணையாரைப் போன்றவர். நில புலன்களும், சொத்துக்களும் அவரிடம் ஏராளமாக இருந்தன.

அவருக்கு இந்த மாணவன் மட்டுந்தான் ஒரே மகன். அவனைப் படிக்க வைத்து வேலைக்கு அனுப்பி வருவாய் ஈட்ட வேண்டிய அவசியம் எதுவும் அவருக்கு இல்லை.

அதனால் அவர் எந்த ஆசிரியரையும் அணுகித் தனது மகனுக்கு நன்றாகக் கற்றுக் கொடுங்கள் என்று கேட்டுக் கொண்டதில்லை.

ஆனால் அவர் உடற்பயிற்சி ஆசிரியரை மட்டும் அணுகித் தனது மகனுடைய உடல் ஆரோக்கியத்துக்கான நல்ல பயிற்சிகளை மட்டும் அளிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

அவன் விளையாட்டுகளிலும் சுமாராகவே இருந்தாலும்கூட அதற்கான விசேடப் பயிற்சிகள் மட்டும் அவனுக்கு அளிக்கப்பட்டன.

நாம் இங்கு என்ன கூற வருகிறோம்?

படிப்புக்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவத்தை

விளையாட்டு மற்றும் உடற்பயிற்சிகளுக்கும் கொடுக்கவேண்டுமென்று கூற வருகிறோமா?

அப்படிக் கூற வரவில்லை.

ஒரு பள்ளிக்கூடத்து மாணவனை அவனுடைய தாயார் மதிய உணவையும் கொடுத்து பள்ளிப் பேருந்தில் அனுப்பி வைக்கிறார்.

அவர் என்ன சொல்லித் தனது குழந்தையை அனுப்பி வைப்பார்?

"எல்லாப் பாடங்களையும் நன்றாகப் படித்து வா!"– என்று கூறி அனுப்புவாரா?

படிப்பதற்காகவே பையனை அனுப்பி வைத்தாலும் அவர் அப்படியெல்லாம் கூறி அனுப்பி வைக்க மாட்டார்.

"பஸ்ஸில் ஜாக்கிரதையாகப் போய் வா!"– என்று கூறித்தான் அனுப்பி வைப்பார்.

இதுபோல் நமது குழந்தையிடம் ஓரளவு பணத்தைக் கொடுத்து பஜாரில் சில பொருட்களை வாங்கி வரச் சொல்லி அனுப்புகிறோம். பொருட்களின் பட்டியலையும் கொடுத்து அனுப்புகிறோம்.

என்ன சொல்லி அனுப்புவோம்?

"கொண்டு போகும் பணத்தைக் கவனமாகப் பார்த்துக்கொள்" – என்று கூறித்தான் அனுப்புவோம்.

–இப்படி கல்வி கற்றுக்கொள்ள பள்ளிக்கூடம் செல்லும் ஒவ்வொரு மாணவ – மாணவியரும் அளப்பெரிய பொக்கிஷத்தையும் தம்முடனேயே எடுத்துச் செல்கின்றனர்.

அவர்கள் தங்களுடன் எடுத்துச் செல்லும் அந்தப் பொக்கிஷத்தை இழந்திடாமல் பாதுகாத்திடுவது தான் அவர்களுடைய பிரதானமான கடமை.

அவர்கள் அதனை இழந்திடாமல் பாதுகாப்பு வழங்கிடுவது தான் ஆசிரியர் மற்றும் பெற்றோரின் கடமை.

அதென்ன பொக்கிஷம் அவர்கள் தங்களுடன் எடுத்துச் செல்லும் அத்தகைய பொக்கிஷம்?

இனிமேல்தானே ஒவ்வொன்றாகக் கற்றுக் கொள்ளப் போகிறார்கள்?

பொக்கிஷம் என்று கூறக்கூடிய அளவில் அவர்களிடம் எதுவுமே இல்லையே?

–பச்சை மண்ணாக அல்லவா இருக்கிறார்கள்?

–பச்சைக் குழந்தையாக அல்லவா இருக்கிறார்கள்?

–கள்ளங்கபடமில்லாத நிலையில் அல்லவா இருக்கிறார்கள்?

–எதையுமே தெரியாத நிலையில் அல்லவா இருக்கிறார்கள்?

– அவர்கள் தங்களுடன் எதையுமே எடுத்துச் செல்லவில்லையே?

– இனிமேல் தானே அவர்கள் ஒவ்வொன்றாகக் கற்றுத் தமது அறிவைப் பெருக்கிக்கொள்ளப் போகிறார்கள்?

அப்படி அவர்கள் எதைத்தான் தங்களுடன் எடுத்துச் சென்றுள்ளார்கள்?

எதைத்தான் அவர்கள் பாதுகாப்பாக வைத்துக்கொள்ள வேண்டும்?

அவர்கள் என்ன பொக்கிஷத்தைத் தங்களுடன் வைத்துள்ளார்கள் என்பதைப் பார்த்திடும் முன்னால்

உங்களிடம் நேரடியாக ஒரு கேள்வி.

நீங்களும் ஒரு காலத்தில் குழந்தையாக இருந்துதான் இப்போது நீங்கள் குழந்தைகளுக்குப் பெற்றோராக இருக்கிறீர்கள்.

நீங்கள் உங்களுடைய ஐந்து வயது வரை என்னென்ன மனக் கவலைகளையும், மனத்துயரங்களையும் அனுபவித்தீர்கள்?

அந்த வயது வரை உங்களுக்கு நண்பர்கள் எத்தனை பேர்? – எதிரிகள் எத்தனை பேர்?

அந்த வயது வரை எதையெல்லாம் சாதிக்கத் திட்டமிட்டீர்கள்? – எதையெல்லாம் சாதிக்க முடியாமல் வருத்தமடைந்தீர்கள்?

நம்முடைய ஐந்து வயது வரை நமக்கு எந்தவிதமான மனோரீதியான பிரச்சினைகளும் கிடையாது.

அதுவரை நாம் அனைவரும் நமது கள்ளங்கபடமற்ற குழந்தைத் தன்மையுடனேயே இருந்துள்ளோம்.

அந்தக் குழந்தைத் தன்மை தான் நம்முடைய பொக்கிஷம். அதுதான் நமது சொத்து.

நமது பள்ளிக்கூட பாடத் திட்டங்களில்

நமது குழந்தைத் தன்மையைப் பெருக்கிக் கொள்வதற்கு எந்த வழிவகையும் ஏற்படுத்திக் கொடுக்கவில்லை.

மாறாக நமது அறிவைப் பெருக்கிக்கொள்ள மட்டுமே வழிவகை செய்யப்பட்டுள்ளது.

நாம் பெருக்கிக் கொள்ளும் அறிவு அனைத்தும்

நமது கள்ளங்கபடமற்ற தன்மைக்கு எதிரானவையே.

அறிவு அனைத்தும் கணக்கீடுகளே.

–கள்ளங்கபடுகளோடு இணைந்தவையே.

அப்படியானால் எந்த அறிவையும் நாம் பெருக்கிக் கொள்ளக் கூடாதா?

–புதிதாக எதனையும் கற்றுக் கொள்ளக் கூடாதா?

பள்ளிக்கூடங்கள், பாடத்திட்டங்கள் அனைத்தும் தேவையற்ற ஒன்றா?

அறிவைப் பெருக்கிக் கொள்வது எப்படி முக்கியத்துவமற்ற ஒன்றாக இருக்க முடியும்? அறிவைப் பயன்படுத்தித்தான் உலகத்து பணிகள் அனைத்துமே செயல்பட்டு வருகின்றன.

அறிவு முடங்கிப் போனால் உலகத்து வளர்ச்சிகள் அனைத்துமே முடங்கிப் போய்விடும்.

ஒரு நாடும், நாட்டிலுள்ள தொழில்களும், விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளும் வளர வேண்டுமானால் அது அந்த நாட்டிலுள்ளவர்களின் அறிவு வளர்ச்சியைப் பொறுத்ததே ஆகும்.

அறிவு தேவையானது என்பதும் அதனை வளர்த்திட வேண்டும் என்பதும் உண்மைதான்.

ஆனால் அதே சமயம் அவை நமது கள்ளங்கபடமற்ற குழந்தைத் தன்மையை முடமாக்கி விடும் என்பதும் உண்மைதான்.

அறிவின் உயர்வைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு

நாம் எவரும் நமது கள்ளங்கபடமற்ற தன்மையின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளவில்லை.

அதனுடைய – கள்ளங்கபடமற்ற தன்மையினுடைய முக்கியத்துவத்தைப் புரிந்து கொண்டு அதனை வளர்க்க வேண்டுமா?

அதனை வளர்ப்பது என்ற சிந்தனை கூட அறிவு சார்ந்த ஒன்றுதான்.

ஆகவே கள்ளங்கபடமற்ற தன்மையை வளர்க்க வேண்டும் என்ற முயற்சி எதுவும் தேவை இல்லை.

கள்ளங்கபடமற்ற தன்மையின் முக்கியத்துவத்தை மட்டும் புரிந்து கொண்டால் போதும்.

நமது அறிவின் வளர்ச்சி அனைத்தும் நமது இயற்கையான கள்ளங்கபடமற்ற தன்மையைப் பாதிக்கும் என்பதை மட்டும் புரிந்து கொண்டால் போதும்.

**நமது செயல்களை வெற்றிகரமாக நிறைவேற்றிட நமது அறிவுதான் முக்கியத்துவம் மிகுந்தவையாகும்.**

**அதுபோல் நமது வாழ்வு சிறப்பாக அமைந்திட நமது கள்ளங்கபடமற்ற இயற்கையான நிலைதான் முக்கியத்துவம் மிகுந்ததாகும்.**

**நமது செயல்களின் வெற்றிக்குத் தேவை அறிவு.**

**வாழ்க்கையின் அமைதிக்கும், மகிழ்ச்சிக்கும் தேவை இந்தக் கள்ளங்கபடமற்ற தன்மை.**

**இதுதான் ஒவ்வொரு மாணவனிடமும் இருக்கவேண்டிய அடிப்படை மாண்பாகும்.**

(இந்தக் கட்டுரை சம்பந்தமான கேள்விகள் வரவேற்கிறோம். கேள்விகள் அனுப்பவேண்டிய எண். 9789165555) ★

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## மனம் விரும்பியதை அடைந்த பிறகும் மகிழ்ச்சி நீடிக்கவில்லையே அது ஏன் ?

**கேள்வி :** நான் ஒரு நடுத்தர வயதுடையவன். எனக்கு சிறுவயது முதலே ஓர் அழகிய காரை வாங்கி ரசித்து அனுபவித்து ஓட்ட வேண்டும் என்று அலாதி ஆர்வம். நாட்டின் பல இடங்களுக்கும் மகிழ்ச்சியாகச் சென்று சந்தோசமாக இருக்க வேண்டும் என்பது என் பல நாள் திட்டம். நான் மிகவும் சிரமப்பட்டு உழைத்து முன்னேறி எந்தக் காரை வாங்க வேண்டும் என்று நினைத்தேனோ அதே காரை வாங்கி விட்டேன். பல நாள் ஏக்கம் நிறைவேறியது. கார் வாங்கியபோது மனதில் மகிழ்ச்சி, ஆரவாரம் இருந்தது. ஆனால் அந்த மகிழ்ச்சி இப்பொழுது இல்லை. பல இடங்களுக்கு செல்ல வேண்டும் என்ற வேட்கை இப்பொழுது சுத்தமாக இல்லை. அது ஏன்? பல ஆண்டுகாலமாக எதிர்பார்த்து வாங்கிய கார் இப்பொழுது மகிழ்ச்சியை அளிக்காமல் போனதற்கு என்ன காரணம்? நான் விரும்பியதை அடைந்த பிறகும் என் மனதில் மகிழ்ச்சி நீடிக்கவில்லையே, அது ஏன்?

**பதில் :** மகிழ்ச்சி என்பது புறப்பொருள் சார்ந்ததா? அக உணர்வு சார்ந்ததா?

உலகில் பெரும்பாலானோர் மகிழ்ச்சி என்பது புறப்பொருளிலிருந்து கிடைப்பதாகத்தான் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் உண்மை என்னவென்றால், மகிழ்ச்சி என்ற மன உணர்வின் மீதுள்ள ஈடுபாடே – இன்ப நாட்டமே காரை வாங்கத் தூண்டுகிறது.

அதாவது காரை வாங்கினால் மகிழ்ச்சி ஏற்படும் என்ற காரணத்தினாலே காரை வாங்குகிறோம்.

காரை வாங்கியவுடன் ஏற்படும் மகிழ்ச்சி பிறகு நீடிப்பது இல்லையே. இதற்குக் காரணம் என்ன என்பது தான் உங்கள் கேள்வி.

ஸ்ரீ பகவத் அய்யாவின் அரிய கண்டுபிடிப்பான மனதின் இயக்கத்தை அகம் – புறம் எனப் பிரித்துப் புரிந்துகொண்டால் உங்களுடைய கேள்விக்கான விடை தெளிவாகப் புரிந்துவிடும்.

நாம் நமது பிரச்சினையை முதலில் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். பிரச்சினைக்கான ஆணிவேர் எது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும்.

உதாரணமாக ஒரு மரத்தை முழுமையாக அழிக்க வேண்டும் என்றால் என்ன செய்ய வேண்டும்?

மரத்தின் கிளைகளை வெட்டினாலும் மரத்தின் அடிப்பகுதியை வெட்டினாலும் கூட மரம் மீண்டும் தழைத்து முளைத்துவிடும்.

மரத்தை முழுமையாக அழிக்க நாம் மரத்தின் அடிப்பகுதி நிலத்தைத் தோண்டி, மரத்தின் ஆணி வேர் பகுதி எது என்பதைக் கண்டு பிடித்து அந்த மரத்தின் ஆணி வேரை அறுத்து விட்டால், மரம் தானாகவே பட்டுப்போய் விடும். மரம் தன்னுடைய ஒட்டு மொத்த உருவத்தையும் இழந்துவிடும்.

அது போல் நாம் சந்திக்கும் பிரச்சினையின் ஆணிவேர் பகுதி எது என்பதைக் கண்டுபிடித்து அதற்குத் தீர்வு கண்டு விட்டால், நாம் சந்திக்கும் பிரச்சினையும் கூட மரம் போல பட்டுப் போய்விடும்.

இப்பொழுது நாம் சந்திக்கும் பிரச்சினை என்ன? அதன் ஆணிவேர் பகுதி எது என்பதை நாம் கண்டுபிடிப்போம்.

பிரச்சினைக்கு மூல காரணம் புறப்பொருளான கார் காரணமா? அல்லது கார் நம்மிடம் சொந்தமாக இருந்தால் மகிழ்ச்சியாக இருக்கும் என்ற நமது மன உணர்வு காரணமா?

உண்மையில் கார் நமக்கு மகிழ்ச்சியை அளிக்கவில்லை. நமது மன உணர்வே நமக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது.

புறப்பொருளான காரையும் நமது மன மகிழ்ச்சியையும் சேர்த்து முடிச்சு போட்டுக் கொண்டு நாம்தான் போராடுகின்றோம்.

கார்தான் நமக்கு மகிழ்ச்சியை அளிக்கும் என்றால் கார் வாங்கிய பிறகு நமக்கு மகிழ்ச்சி பல மடங்கு கூடி அல்லவா இருக்க வேண்டும். பல இடங்களுக்கு செல்ல வேண்டும் என்ற நமது திட்டம் நிறைவேறி இருக்கும் அல்லவா?

நமது மன மகிழ்ச்சிக்கு புறப்பொருளான கார் காரணம் இல்லை என்பது நமக்குத் தெளிவாக விளங்கி விட்டது.

மன மகிழ்ச்சி உணர்வுதான் பிரச்சினைக்கான ஆணிவேராக இருக்கிறது. மன உணர்வை எப்படி சீரமைப்பது? எப்படி சரி செய்வது?

– என்பதைபார்ப்போம்.

மன உணர்வை சீரமைப்பதற்காக நாம் எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை. மன உணர்வை சீரமைக்க முயற்சி செய்வதே அனைத்துப் பிரச்சினைக்கும் மூல காரணம் என்பதுதான் ஞான புரிதல்.

நமது ஐந்து புலன்களில் ஒன்றான கண் வழியாக நமக்கு மிகவும் பிடித்த ஒரு காட்சியை வெகு நேரம் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

காது வழியாக நாம் விரும்பிய இசையைக் கூட ஓர் எல்லைக்கு மேல் தொடர்ந்து கேட்டுக் கொண்டும் இருக்க முடியாது.

நமக்குப் பிடித்த வாசனையையும் தொடர்ந்து நுகர்ந்து கொண்டும் இருக்க முடியாது.

நமக்குப் பிடித்த உணவையும் கூட ஓர் அளவுக்குமேல் உண்ண முடியாது.

எப்பேர்பட்ட உச்சக்கட்ட மகிழ்ச்சியைத் தரும் உடல் உணர்வைக் கூட ஒரு குறிப்பிட்ட எல்லைக்குமேல் நீடிக்க முடியாது.

இப்படி கண்கள் வழியாக நம்மால் தொடர்ந்து ஒரு காட்சியைக் காண முடியாது, காதுகள் வழியாக தொடர்ந்து நமக்கு பிடித்த இசையைக் கேட்கவும் முடியாது, பிடித்த வாசனையை நீண்டநேரம் நுகரவும் முடியாது, பிடித்த உணவை ஓர் அளவுக்கு மேல் உண்ணவும் முடியாது, உடல் அனுபவத்தையும் ஓர் எல்லையைத் தாண்டி அனுபவிக்கவும் முடியாது.

நமது மனமும் புலன்களைப் போல தான் செயல்படுகிறது. இதைப் போல மனமும் ஒரு புலனே. இந்த மனதின் மூலமாகவும் எந்த உணர்வையும் நாம் தொடர்ந்து தக்க வைக்கவும் முடியாது.

எல்லா மன உணர்வுகளும் மறையும் பொழுதுதான் அவை வந்ததே நமக்கு தெரிகின்றது. முடிந்துபோன ஒன்றைத்தான் நாம் உணர்வாக உணர்கிறோம்.

தோன்றி மறையும் உணர்வுகளுக்கு நாம் எதுவும் செய்யத் தேவையில்லை என்பதுதான் நமது ஞானப் புரிதல். மன உணர்வை நாம் சீரமைக்கத் தேவையில்லை என்பதை விளங்கிக் கொண்டால் போதும்.

புறத்தில் நமக்குத் தேவையான வசதிகளை செய்து கொள்வதில் எந்தவிதத் தவறும் இல்லை. நாம் நமது மன உணர்வுகளை நிர்வாகம் செய்யாது நம் வாழ்க்கை வசதிக்குத் தேவையான உணர்வுகளை தூண்டுகோலாக எடுத்துத் திட்டமிட்டு செய்வதால் வாழ்வு உயரும்.

நமக்கு வருகிற மன உணர்வுகளை நாம் வாழ்வை வளமாகவும் மகிழ்ச்சிகரமாகவும் அமைத்துக் கொள்வதற்கான தூண்டுகோலாகவே பயன்படுத்திக் கொள்ளலாம். நாம்தான் அதை தவறாகப் புரிந்து கொண்டுள்ளோம். புறப்பொருளான கார் நமக்கு மகிழ்ச்சியை அளிப்பதாக நினைத்துக்கொண்டு தடுமாறிப் போய் விடுகின்றோம்.

மனதில் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் நமக்குக் கட்டுப்பட்டவை அல்ல. அவை இயந்திரகதியாக தாமாகத் தோன்றி தாமாக மறைந்து விடுகிறது. அவற்றை எந்த நிர்வாகமும் செய்யாமல் விட்டு விட்டால் போதும். மனப் பிரச்சினைகள் தாமாகவே தீர்வு அடைந்துவிடும்.

இந்நிலையில் மகிழ்ச்சி மட்டுமல்ல துன்பமும் நீடிப்பதில்லை.

இதுவே மன ஆரோக்கியமான நிலை – பிரவாக நிலை.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/c. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

ஞானியர் அனைவருக்கும் இந்த **சக பயணியின் வணக்கம்.**

நமது பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

மனதின் இயக்கத்தைப் புரிந்துகொண்டு அகத்தேடல் இன்றி வாழ்பவர்களுக்கு ஒவ்வொரு நாளுமே புதிய நாள்தான்.

மனம், விடை காண முடியாத கடல். மனதில் ஓர் அடைவிடத்தை அடைய விரும்புவதே தேடலுக்கு காரணமாக அமைந்துவிடுகிறது. ஆன்மிகத்தின் ஆரம்ப கட்டம் அகத் தேடலாகத்தான் அமைந்துள்ளது. தேடல் நிறைவு பெறும் இடம் ஞானம்.

மனதின் இயக்கம் அறிவுக்கு அப்பாற்பட்டது – அறிவுக்குச் கட்டுப்பட்டதல்ல என்று கண்டு கொள்வதே ஞானம்.

ஞானத்துக்கு பிறகே அகத்தேடல் நிறைவுக்கு வருவதோடு விடுதலையும் சாத்தியமாகின்றது.

விடுதலையோடு இயங்கும் மனமே ஆன்மிகத்தின் உச்சம்.

விடுதலைக்கு பிறகு உலகியல் வாழ்வும்கூட ஆன்மிக வாழ்வாக மாறிவிடுகிறது.

அதுவரை அகத்தை சீரமைக்கப் போராடிய அறிவு, அதன் பிறகே புறத்தை சீரமைக்க முழுமையாக சிந்திக்கிறது.

புற வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொண்டால் அது சரியானதாக இருக்கும்?

'எனக்காக நான் வாழ்ந்ததில் தவறில்லை. எனக்காக நான் வாழ்ந்து கொண்டிருப்பதிலும் தவறில்லை.

நமக்காகவும் நாம் வாழ்வது எவ்வாறு?' என்பதை சிந்தனைக்கு எடுத்துக் கொள்வதும் நமது கடமை.

அப்படி ஒரு கடமையைத்தான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் **புதிய உலகம் படைப்போம்** என்ற நூலின் மூலம் அறிமுகப்படுத்தியுள்ளார்.

உலகம் சம நிலை பெறவே, உயர்வு – தாழ்விலா நிலை வேண்டும்.

மனிதனின் முக்கியத் தேவைகள் உணவு, உடை, இருப்பிடம்.

உலகில் பல கோடிப்பேர் இம் மூன்றிற்காகவும் பெரும் போராட்டத்துடன் வாழும்போது, நாம் இவற்றுக்காக சிரமமின்றி வாழ்ந்துவருவது மனதில் ஓர் உறுத்தலைத் தருகிறது. அது அவரவர் கர்மவினை என்று விட்டுவிடாமல், நம் வாழ் நாளில் ஏதேனும் செய்யவேண்டும் என்ற எண்ணம் மனதில் ஓடிக்கொண்டே இருக்கிறது. இதற்கான முயற்சியும் செயலுமே நிஷ்காமிய கர்மாவாக அமையும்.

இதற்கான சாத்திய சிந்தனையைதான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 'புதிய உலகம் படைப்போம்' என்னும் புத்தகத்தின் வழியே தெரிவிக்கிறார்.

இப் புத்தகத்தில் தெரியும் ஒளியைப் பலரும் உணரவேண்டும் என்ற ஆர்வத்தில்

ரூபாய் 50/– விலையுள்ள இப் புத்தகத்தை, பலரின் நன்கொடையால் பரிசில் விலையாக ரூபாய்.10/– க்கு வழங்க உள்ளோம்.

இதற்காக நன்கொடை வழங்கிய நல் உள்ளங்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இன்னும் பல்லாயிரக்கணக்கான பிரதிகள் பிரசுரித்து உலக நலனில் அக்கறையுள்ள சிந்தனையாளர்களின் கைகளில் கொண்டு சேர்க்க வேண்டும் என்பது ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் விருப்பம்.

வாய்ப்புள்ளவர்கள் நன்கொடைகள் வழங்கி உதவிடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இப் புத்தகத்திற்கு தாங்கள்அளிக்கும் நன்கொடை, தங்கள் வாழ்நாளின் அரிய செயலாக இருக்கும்.

புத்தாண்டு பிறக்கிறது. உலகத்திற்கே நல்ல ஆண்டாக அமையட்டும்..

மேலும் தினசரி நமது சத்சங்கம் ZOOM Meeting வாயிலாக நடைபெற்று வருகிறது. இது பலருக்கு ஞானத் தெளிவு ஏற்பட பேருதவியாக உள்ளது. தேடுதல் உள்ள உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அவர்களையும் பங்குபெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மிக விரைவில் நேரடி ஞான முகாம் நடத்த உள்ளோம்?. இருப்பினும் நமது ZOOM Meeting –ஐயும் தொடர்ந்து நடத்த உள்ளோம்.

உலகம் உய்ய...! ஞானத்தை உரைப்போம்....!

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷினில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்த செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்து வருகிறோம்.

வருடத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் மீதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2) சென்னையில் ஸ்ரீ பகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் - ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினையும் எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழு கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/- வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் இதனை அதிகபட்சம் இரண்டு வருடங்களுக்கு மட்டுமாவது வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**

# ஜென் கதை

## ”மனம் ஒருபோதும் பக்குவப்படாது”

ஒரு குடும்பஸ்தன் இருந்தான்.

அவன் தன் இளம் வயதிலிருந்தே மனதை பக்குவப் படுத்துவதற்காக ஆன்மிகத்தில் ஆர்வம் கொண்டு மனதுக்கான பயிற்சி முயற்சிகளில் ஈடுபட்டு வந்தான்.

கிட்டத்தட்ட 20 ஆண்டுகளாக பயிற்சிகளில் ஈடுபட்டதால், அவ்வப்போது ஓரளவுக்கு மனஅமைதியும் பெற்றான். ஆனால் அது அவனுக்கு நிரந்தரத் தீர்வாக அமைய வில்லை.

பயிற்சியில் ஈடுபடும்போது சாத்தியமான அமைதி, பிரச்சினையை எதிர்கொள்ளும்போது சாத்தியப்படவில்லை.

தொழிலில் தோல்வி ஏற்படும் போது பயம்...

மனைவி அவனை குற்றம் சொல்லும்போதெல்லாம் கோபம்...

அவன் வறுமையை நினைக்கும் போதெல்லாம் கவலை...

என அவன் பிரச்சினைகளை எதிர் கொள்ளும் போதெல்லாம் எதிர்மறை உணர்வுகளால் பாதிப்படைந்தான்.

அவனது பயிற்சி முயற்சிகள் அனைத்தும் அவ்வப்போது பலனைத் தந்ததைத் தவிர நிரந்தரத் தீர்வை தரவில்லை.

இதனால் மிகவும் சோர்வடைந்து போனான்.

பிறகு யோசிக்கலானான். 'ஞானிகள் அனைவரும் துறவிகளாகதான் இருக்கிறார்கள். குடும்பம் என்று எதுவும் இல்லை. தொழில் என்று எதுவும் இல்லை. ஆதலால் பிரச்சனை என்று எதுவும் இல்லாமல் இருக்கிறார்கள். குடும்பத்தில் இருக்கும் நமக்குத்தான் எல்லாப் பிரச்சினைகளும் ஏற்படுகிறது' என்று கருதினான்.

ஒரு கட்டத்தில் வீட்டை விட்டு வெளியேறிவிட்டான். கொஞ்சம் பணத்தோடு எங்கோ சென்றான். காவியைத் தரித்தான். மழிக்காத தாடியோடு துறவியாகவே மாறிவிட்டான். கையில் இருக்கும் காசும் கரைந்தது. கையேந்தும் நிலை வந்தது. இருப்பிடம் இல்லாமல் தவித்தான். இப்போதும் அவனுக்கு தன் நிலையை நினைத்து பயம், கவலை, பதற்றம், கோபம் என அனைத்தும் மாறி மாறி வந்தன. என்ன செய்வது என்று அறியாது திகைத்து நின்றபோது ஒரு வித்தியாசமான ஞானியைப் பற்றி கேள்விப்பட்டான்.

அவர் குடும்பத்துடன் வாழ்வதாகவும் எல்லோருடைய பிரச்சினைகளுக்கும் தீர்வு வழங்குவதாகவும் அறிந்தான். அவர் இருப்பிடம் தேடிச் சென்றான்.

அவரைச் சந்தித்த அவன் மிகவும் ஆச்சரியம் உற்றான்.

ஜடாமுடி இல்லை, தாடி இல்லை, காவி இல்லை, மனைவி மக்கள் என குடும்பத்துடன் மாட மாளிகையில் வாழ்ந்து வந்தார். சிறந்த முறையில் வாணிபம் செய்தார்.

ஞானி என்றால் எப்படி இருப்பார் என்ற இவன் கருத்துக்கு மாறாக ஓர் அரசனைப் போல் இருந்தார்.

ஆனால் அதே நேரத்தில் அனைத்து மனப் பிரச்சினைகளுக்கும் ஞானியாக தீர்வு வழங்கினார். இதை அவனால் நம்ப முடியவில்லை!

இவன் அவரிடம் தன் பிரச்சினை அனைத்தையும் எடுத்துக் கூறி "20 ஆண்டுகளுக்கு மேல் பயிற்சி முயற்சி செய்தும் மனம் முழுவதும் பக்குவப்படவில்லை, பயம், பதற்றம், கவலை, கோபம் என அனைத்து எதிர்மறை எண்ணங்களும் உணர்வுகளும் வருகின்றன. எல்லா தியானங்களும் பயிற்சிகளும் செய்து பார்த்துவிட்டேன். துறவறமும் மேற்கொண்டு விட்டேன். மனப் பிரச்சினை இப்போது அதிகமாகிவிட்டதே தவிர குறைந்தபாடில்லை... ஏன் என் மனம் பக்குவப்படவில்லை?...

"உங்களைப் பார்த்தால், துறவியாகவும் தெரியவில்லை, மனைவி மக்களுடன் வாழ்ந்து வருகிறீர்கள். வாணிபமும் செய்கிறீர்கள். அதேநேரம் மிகவும் சாந்தமாகவும் அமைதியாகவும் இருக்கிறீர்கள். உங்கள் மனம் பக்குவப்பட்ட தைப்போல் என் மனம் பக்குவப்பட நான் என்ன செய்ய வேண்டும்?" என்றான்.

ஞானி, "மனப்பக்குவம் என்று எதைக் குறிப்பிடுகிறாய்?" என்று கேட்டார்.

அவன், "மனம் நம் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். எதிர்மறை எண்ணங்களே தோன்றக் கூடாது. எப்போதும் அமைதியாக இருக்க வேண்டும். நீங்கள் அப்படித் தானே இருக்கிறீர்கள்." என்றான்.

ஞானி, "அப்படி எனில் என் மனமும் பக்குவப்பட வில்லையே!" என்றார்.

அதற்கு அவன், "உங்கள் மனதிற்கும் என் மனதிற்கும் என்ன வித்தியாசம்?" என்று கேட்டான்.

ஞானி, "நம் இருவர் மனத்திற்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. அது அது அதன் இயல்பு படிதான் இயங்கிக்கொண்டிருக்கிறது. உனக்கு ஏற்பட்டது போல் எனக்கும் எதிர்மறை எண்ணங்களும் உணர்வுகளும் தோன்றிக் கொண்டுதான் இருக்கிறது." என்றார்.

அவன் "அப்படி எனில் எனக்கு ஏற்பட்ட பாதிப்பு உங்களுக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லையே" என்றான்.

ஞானி அவனை உற்று நோக்கியவாறு, "நீ துறவு மேற்கொண்டதாக சொன்னாயே, அது புறத்துறவு. நான் இருப்பது அகத்துறவு. என் அறிவுக்கு அகத் துறவு ஏற்பட்டு விட்டது அவ்வளவுதான்." என்றார்.

அவன், "ஐயா, எனக்கு விளங்கவில்லை. சற்று விளக்கமாகக் கூறுங்கள்" என்றான்.

ஞானி, தன் பணியாளரிடம் இரண்டு முகம் பார்க்கும் கண்ணாடியை எடுத்து வரச் சொன்னார்.

ஒன்றை குடும்பஸ்தனிடம் தந்தார். மற்றொன்றை அவருக்கு முன்னால் வைத்துக் கொண்டார்.

"இந்த கண்ணாடி நம் மனம் போன்றது. இவை தன் முன்னால் இருப்பதை அப்படியே பிரதிபலிக்கும். இவை இரண்டும் ஒரே மாதிரிதான் செயல்படுகிறது. அதில் எந்த வேறுபாடும் இல்லை. இந்த கண்ணாடி என்ற மனம் வழியாகத்தான் நாம் இவ்வுலகையே புரிந்து கொள்கிறோம். நீ கண்ணாடியில் தோன்றும் பிம்பத்தோடு பந்தப்பட்டு உனக்கு சொந்தமானதாக நினைத்து பாதிப்படைகிறாய். கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிம்பம் அனைத்தும் உன்னுடையதாகவே எண்ணி அவற்றை மாற்றியமைக்க முயற்சி செய்கிறாய்...

" நான் அப்படி அல்ல. மன உணர்வுகளும் எண்ணங்களும் என் கட்டுப்பாட்டில் இல்லாதவை. அதனோடு பந்தம் இல்லாமல் இருக்கிறேன். அதன் மூலமே உலகத்தைப் பார்த்தாலும், அதை நான் நிர்வகிப்பது இல்லை. தேவையான செயலுக்கு பயன்படுத்திக் கொள்கிறேன். ஆனால் அதை மாற்ற முயற்சி செய்வதில்லை. நீ புறச் செயலை செய்யாமல், மனப் பிரதிபலிப்பான எண்ண உணர்வுகளை மாற்றும் முயற்சியில் இருக்கிறாய். இதற்கு என்றும் தீர்வு கிடையாது...

"மனம் அனைவருக்கும் ஒன்று போல் தான் செயல்படுகிறது. அதாவது அதனதன் இயல்புப் படி தான் செயல்படுகிறது. அதை மாற்றுவது நமது வேலையல்ல. நமது புறச் செயலுக்கு தூண்டுகோலாக எடுத்துக் கொள்வது மட்டுமே நமது வேலை.

"நம் இருவருக்கும் மனதின் செயல்பாட்டில் எந்த வித்தியாசமும் இல்லை. அறிவில் தான் வித்தியாசம்...

"புரிந்துகொண்ட அறிவு புறத்தே செயல்படுகிறது.

புரியாத அறிவு அகத்தை மாற்றியமைக்கப் போராடுகிறது." என்றார் ஞானி.

நன்கு புரிந்து கொண்டான். காவி உடை வேண்டாம், கற்றைச் சடை வேண்டாம், புரிதல் ஒன்றே போதும் என்று புறப்பட்டான் குடும்பஸ்தன்.

# நிகழ்ச்சி நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555



புத்தாண்டில் ஐயாவின்
ஆசியோடு...







ஸ்ரீ பகவத்
பவனில்...







ஸ்ரீ பகவத் ஐயா
அவர்களின்
**"புதிய உலகம்
படைப்போம்"**
எனும்
புதிய நூல்.